# தமிழீழ எழுச்சி கானங்கள்

] ஆனையிறவு மீட்புச் சமர்

] முல்லைச் சமர்



தமிழ்த்தாய் வெளியீடு

# தமிழீழ எழுச்சி கானங்கள்

ஆனையிறவுச் சமர்
முல்லைப் போர்

தமிழ்த்தாய் வெளியீடு



28-04-2003

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : திருமலைச்சந்திரன்,நிரோஜன்

பல்லவி

சந்தோஷ மேகங்கள் வந்தாடும் நேரத்தில்
செந்தூர பூமழை தூவியது
சென்றார்கள், வென்றார்கள்,என்றார்கள் அந்நேரம்
தேகமெல்லாம் மின்னல் ஓடியது.



அனுபல்லவி

வந்தவன் போனவன் எங்களை வென்றவன்
வாசல் மறித்தானடா - எங்கள்
தந்தைக்கு முந்திய சொந்தங்களும் அதைத்
தாங்கி இருந்தாரடா.

சரணம்

பச்சைத் தமிழரின் ரத்தத்திலே - இந்த
உப்புக்கடல் சிவப்பானதுண்டு.
பிச்சை எடுத்ததால் அச்சத்திலே அன்று
போக வரிசையில் நின்றதுண்டு - இன்று
ஆனையிறவிலே ஏறியே நாமெலாம்
ஆடுகிறோம் ஆடிப் பாடுகிறோம்.
பிரபாகரனின் காலத்தில் வாழ்ந்திடும்
ஆணவத்தால் முடி சூடுகிறோம்

பாயும் புலிகளின் வீரத்திலே - பகை
பாசறை தீயினில் வெந்ததம்மா.
தாயின் மடியினில் நாங்கள் நடந்திடும்
நாளும் திரும்பியே வந்ததம்மா - இப்போ
ஊரில் புகுந்திடும் வீதியும் வந்தது
தேரினில் ஏறிய வீதியுலா.
கொற்றத் தேவி விழிதிறந்தாளடா
நாளும் எமக்கினி வெற்றி விழா

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : ஜெயாசுகுமார்.

பல்லவி

நித்திரையா தமிழா நீ நிமிர்ந்து பாரடா - இந்த
நிலத்தில் உனக்கும் உரிமையுண்டு எழுந்து சேரடா
தமிழனுக்கு இந்தமண்ணில் சொந்தமில்லையாம் - உந்தன்
தாய்நிலத்தில் உனக்கு ஒரு பந்தமில்லையாம்
அழுவதன்றி உனக்கு வேறு மொழியுமில்லையாம் - இன்னும்
அடங்கிப் போதல் அன்றி எந்த வழியுமில்லையாம்

சரணம்

அகதி யாகியே தெருவினோரமாய் திரிவதேனடா
அடிமைமாடுகள் போல இன்று நீ அலைவதேனடா
விதிகள் மாற்றி எழுதிடாமல் கிடப்பதேனடா - இன்னும்
விழிகள் மூடி அமைதியாகப் படுப்பதேனடா

அப்பு ஆச்சியர் வாழ்ந்த பூமியிப் பூமிதானடா
அப்புகாமியை ஆளயிங்குமே விட்டதாரடா
இனிமேல் தமிழன் பணியானென்று உரத்துக் கூறடா - இந்த
இழிவில் இருந்து எழுந்தேன் என்று புலிகளாகடா

புதிய வாழ்வதை எழுத நீயுமே களத்திலாடடா
புலிகள் சேனையோ டெழுந்து நின்றுமே தடைகள் மீறடா
தலைவன் எங்கள் தலைவன் உண்டு நிமிர்ந்து பாரடா - தமிழ்
ஈழம் எங்கள் கையில் என்று எழுந்து சேரடா

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : S.G, சாந்தன், ஜெயாசுகுமார்

பல்லவி

ஈடுவைத்து ஈடுவைத்து நந்தலாலா - தமிழ்
ஈழம்தரப் போகிறாவே நந்தலாலா
ஆடும்வரை ஆடிவிட்டா நந்தலாலா - இப்போ
ஆனையிற வெங்களிடம் நந்தலாலா

அனுபல்லவி

எந்தமாதிரி அட அந்தமாதிரி - தமிழ்
ஈழமெங்கள் கண்ணெதிரே வந்த மாதிரி
சொந்த ஊரிலேறி நாங்கள் சென்ற மாதிரி -ஏதோ
தேவதைகள் வந்து வரம் தந்தமாதிரி
விந்தை மாதிரி - வாசம்
வீசும் மாதிரி - அட
சந்தனத்தைப் பூசிக்கொண்டு நின்ற மாதிரி

சரணம்

ஊருக்குள்ள போகப்போறோம் நந்தலாலா - இப்போ
உள்ளதையும் தந்து போறா நந்தலாலா
மாமனையே நம்பி நம்பி நந்தலாலா - இப்போ
மாரடிச்சுக் கொள்ளுறாவே நந்தலாலா

அம்பகாமம் வந்து போனார் நந்தலாலா - இப்போ
ஆட்டிலறி தந்து போனார் நந்தலாலா
அம்மையாரே தந்து போவார் நந்தலாலா - எங்கள்
அம்பாறையும் பன்குளமும் நந்தலாலா

இந்தியாவுக் கோடிப்போனார் நந்தலாலா - இப்போ
இஸ்ரவேலுக் கோடுறாவாம் நந்தலாலா
எங்கு ஓடிப் போயுமென்ன நந்தலாலா - எங்கள்
தம்பிதானே வெல்லப் போறார் நந்தலாலா

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : S.G சாந்தன்.

பல்லவி

இனிவரும் இனிவரும் காலங்கள் - அவை
எங்களின் காலங்கள்.
குனிவதும் பணிவதும் இனியில்லை - தமிழ்க்
குடியினுக் கழிவில்லை.
இருளே இனிமேல் விலகிடு - விடி
பொழுதே மடியினில் உலவிடு.
உலகே எமக்கெனக் குரல் கொடு - எங்கள்
உறவுகள் திரும்பிட வழிவிடு.

அனுபல்லவி

உயிர் ஒரு முறைதான் போகும் போகும்
உரிமைக்காக போகட்டும்.
உடல் ஒரு முறைதான் எரியும் எரியும்
உரிமைக்காக எரியட்டும்.

சரணம்

சாயும் சுகமே சுகமென்று - நீ
பாயிற் சரிதல் முறையன்று.
தாயின் விடிவே எமதென்று - வா
தமிழீழம்தான் முடிவென்று.
இதுநாள் வரையும் அழுதோம் அழுதோம்
இனியெம் தலைகள் நிமிரட்டும்.
நிலமீதினிலே எழுவோம் எழுவோம்
பகைவர் உயிர்கள் கருகட்டும்
தமிழர் விழிகள் நெருப்பானால் - எங்கள்
தலைவன் கைகள் பலமாகும்.
தலைவன் கைகள் பலமானால் - எந்தத்
தடையும் விரைவில் அழிவாகும்.
இளமைக் காரர் முழுதும் முழுதும்
இனிமேல் புலியாய் இருக்கட்டும்.
இருந்தால் ஈழம் மலரும் மலரும்
எமக்கும் சிறகுகள் முளைக்கட்டும்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : S.G சாந்தன்,திருமலைச்சந்திரன்

பல்லவி

ஆனையிறவுக்கு சேலைகள் கட்டி ஆனந்தம் பாடுங்கடி
ஆவாரம் பூவிலே பூவாரம் கட்டி
பூபாளம் பாடுங்கடி - இது
விடியலான நேரம் - இனி
விழியிலில்லை ஈரம் - எம்
கொடியின் வீர வாசம் - தமிழ்
குலத்தின் வேரில் வீசும்

சரணம்

இருண்ட வானம் மீதில் விடி
விளக்கையேற்றினான்
ஈழத்தமிழர் வாழ்வில் வெல்லும்
வழியைக் காட்டினான்
வரண்டு போன வயலில் நீர்
நதியைப் பாய்ச்சினான்
ஆனையிறவைப் பிடித்து பரணிபாடும்
தலைவன் ஆகினான்
தலைவன் எங்கள் தலைவன் -தமிழ்
இனத்தின் பெரிய தலைவன்

அடிமை வாழ்வு முடியும் என்று
அடித்து கூறினான்
தமிழர் தேசம் விடியுமென்று
தலைமை தாங்கினான்
கொடிய பகையும் சரியுமென்று
படைகள் கூட்டினான்
ஆனையிறவைப் பிடித்து பரணி பாடும்
தலைவன் ஆகினான்
தலைவன் எங்கள் தலைவன் - தமிழ்
இனத்தின் பெரிய தலைவன்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை :இசைவாணர் கண்ணன்
பாடியவர் :திருமலைச்சந்திரன்

பல்லவி

தாயின் மணிக்கொடி வானில் பறந்தது ஆனையிறவினிலே - எங்கள்
வாசல் திறந்திடக் கால்கள் நடந்தது மானஉணர்வினிலே
உப்பு விளைந்திடும் பூமியடா - இது
அப்பனின் பூமியடா.
இப்பிறப்பாயினும் எப்பிறப்பாயினும்
எங்களின் பூமியடா.

சரணம்

ஆயிரம் ஆயிரம் வேங்கைகளை
இதற்காகவே நாம் கொடுத்தோம் - இந்தச்
சாவிலும் நோவிலும் தான் தளராமலே
போரினை நாம் தொடர்ந்தோம்.
புலி வீரத்தில் கண்டது இந்தவெற்றி - பிர
பாகரன் காலத்தில் வந்த வெற்றி.

மூன்று நூற்றாண்டுகளாகவே எங்களின்
முற்றத்தை நாமிழந்தோம் - பகை
மூச்சிலும் வீச்சிலும் தாய்நிலம் வாழவும்
பேச்சிழந்தே இருந்தோம்
புலி வீரத்தில் கண்டது இந்த வெற்றி - பிர
பாகரன் காலத்தில் வந்த வெற்றி

போரினில் ஊறிய நாமினி யார்வரும்
போதிலும் தாழ்பணியோம் - தமிழ்
ஈழமே வாழ்வென நாமறிந்தோமினி
என்றுமே நாம் குனியோம்.
புலி வீரத்திற் கண்டது இந்த வெற்றி - பிர
பாகரன் காலத்தில் வந்த வெற்றி

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : நிரோஜன்,தவமலர்.

பல்லவி

ஆனந்தப் பூங்காற்று காதினிலே வந்து
ஆலோலம் ஆலோலம் பாடுதம்மா - இன்று
ஆனையிறவிலே ஏறிடும் போதிலே
ஆகாயம் கைகளில் ஆடுதம்மா



அனுபல்லவி

உப்புக்கடலே, உப்பளக்காற்றே
உம்மை தழுவுகின்றோம்.
ஊருக்குப் போகின்ற வீதியில் ஏறிட
ஏனோ அழுகின்றோம்.

சரணம்

வேரிழந்து ஊரிழந்து ஓடி வந்தவர் - நாங்கள்
வீதியெங்கும் நாதியற்று வெந்து நொந்தவர்.
போருக்கென்றும் ஆதரவாய் நாமிருந்தவர் - எல்லைப்
போரின்படை யாகிப்புலியோடு நின்றவர்
எம் தலைவா எங்களுடன் நின்றே எடுத்தாய் - மீண்டும்
எங்களூரில் சென்றுவாழ வென்று கொடுத்தாய்.
ஆவியுடல் யாவும் உமக்காக கொடுப்போம் - தம்பி
அச்சமின்றி உம்மருகில் என்றும் இருப்போம்

வாழவைத்த வன்னி மண்ணே உன்னைக் கொஞ்சவோ - நாங்கள்
பட்ட கடன் உந்தனுக்கு கொஞ்ச நஞ்சமோ
காலெடுத்து வந்த பகை வென்ற வீரரே - உங்கள்
கையெடுத்து முத்தமிட கையைத் தாருமே
மீதமுள்ள ஊர்களையும் நாளை பிடிப்போம் - எங்கள்
ஊரிலேறி வந்தபகை யாவும் துடைப்போம்
நாளை தமிழ் ஈழமென நம்பி இருப்போம் - அந்த
நாடு வரும் நேரத்திலே நின்று சிரிப்போம்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : ஜெயாசுகுமார்,செங்கதிர்.

பல்லவி

ஆழ்கடல் ஏறிவரும் மீனவரின் பாட்டிது
அன்புமனை யாளிருக்கும் வீடுவரை போகுது
ஈழக்கடல் ஏறிவரும் வீரமுள்ள காற்றிது
எம்முடலில் மீதுபடும் போது திமிர் ஏறுது
கடலம்மா கடலம்மா இனிமேலில்லை பயமம்மா
கடலம்மா கடலம்மா காற்றில் போகும் படகம்மா

அனுபல்லவி

ஈழத்தமிழரின் சோகம் - இன்னும்
எத்தனை நாளினிலே தீரும்
வீரக் கடற்புலி பாயும் - அந்த
வேளையிலே துயர் போகும்

சரணம்

உன்மடியில் ஏறிவந்து அப்பன் வலை வீசினான்.
ஓரிரவு உயிரிழந்து ஊரின்கரையேறினான்
அன்றவனைக் கொன்றவனை இன்றுமகன் வெல்கிறான்
ஆனையிறவேறிக் கடல் மீதிலேதோ சொல்கிறான்
இல்லை இனிவெகு தூரம் - இது
எங்கள் தலைவனின் காலம்
வெல்லும் கடற்புலி நாளை - இனி
வீதியெங்கும் விடிகாலை

பாய்விரித்து படகெடுத்து பாய்ந்து கடலாண்டவர்
பார்முழுதும் தமிழனென்று போய்த்திரும்பி மீண்டவர்
தாய்மடியில் மீண்டெழுந்து நாங்களின்று பாடுறோம்
தாவும் கடற்புலிகளினால் நாளைகடல் ஆளுவோம்
ஏறிவரும் பகை யாவும் - இனி
இல்லை எனும் நிலையாகும்
மாறி அடித்திடும் காற்று - கடல்
மீதில் புலிக் கொடியேற்று

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : இசைவாணர் கண்ணன்
பாடியவர் : S.G சாந்தன்,மணிமொழி

பல்லவி

சின்னஞ் சிறு ஊரு கண்ணழுத வாறு
தேடியுமக்காக காத்திருக்கும்.

தென்னை மரத்தோப்பு உம்மை எதிர்பார்த்து
கண்ணிரண்டும் நோகப் பூத்திருக்கும் - உங்கள்
சின்னஞ்சிறு ஊரு கண்ணழுதவாறு
தேடியுமக்காக காத்திருக்கும்.

அனுபல்லவி

பகைவென்று பகைவென்று
விடைகொண்டவர் - ஆனை
இறவெங்கும் புலிவீரக் கதை சொன்னவர்.
தடைவென்று மாவீரர் எனவானவர் - நாளை
தமிழீழம் வருமென்று துயில்கின்றவர்

சரணம்

உப்புத் தரவையெங்கும் உங்களின் குருதி - இந்த
உப்பளக் காற்றினிலே உங்கள் சுருதி.
எப்பொழுதும் கேட்கும் உங்கள் குரலே - நீங்கள்
எழுந்தே வரவேண்டும் எங்களின் அருகே

கண்களில் நீர்வழிய உமை நினைத்தோம் - உங்கள்
கல்லறை தனில்வந்து எம்மை நனைத்தோம்.
விண்ணிருந்தே இறங்கி கண்ணைத் திறப்பீர் - நீங்கள்
விழுந்த இடம்தன்னில் புன்னகை செய்வீர்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : முரளி
பாடியவர் : மேஜர் சிட்டு

பல்லவி

நிலமும் வானும் கடலும் நேற்று அதிர்ந்தது -அந்த
நிலவும் வானில் இரவுநேரம் அழுதது
நந்திக்கடல் மௌனமாக கரைந்தது
வங்கக்கடல் கோபமாக இரைந்தது

அனுபல்லவி

உலகம் முழுதும் தமிழர் தலைகள்
உயர்ந்தது - உங்கள்
உடலும் பகைவன் இருந்த குகையில்
விழுந்தது.

சரணம்

தாவி நடந்திட்ட போதிலும் மேனியில்
ஆயிரம் சூரியன் பூத்தது - உங்களின்
சாவும் ஒருபெரும் வாழ்வென சொல்லியே
வீழ்கையில் தேசமே வேர்த்தது.
வட்டுவால் பாலம் அழுதது - காற்றும்
வந்துங்கள் காலில் தொழுதது
நந்திக்கடல் மௌனமாக கரைந்தது
வங்கக்கடல் கோபமாக இரைந்தது

மானம் பெரிதென வாழ்ந்துமே தாயக
மண்ணை எழுப்பிய வேதங்கள் - எதிரியின்
சேனைதனை முல்லைத்தீவில் மிதித்துமே
சாவை அழைத்திட்ட பாதங்கள்
நெஞ்சங்கள் யாவிலும் வாழுவீர் - நாளை
வந்தெங்கள் மண்ணினை ஆளுவீர்,
நந்திக்கடல் மௌனமாக கரைந்தது
வங்கக்கடல் கோபமாக இரைந்தது

இயற்றியவர்: நாவண்ணன்
இசை : முரளி
பாடியவர் : ஜெயாசுகுமார்

பல்லவி

வீரக்குழந்தைகளே - எங்கள்
வெற்றித் திலகங்களே
மனப்பாரம் அழுத்துதே மாவீரராகினீர்
நீரெங்கே தெய்வங்களே

சரணம்

வித்துடல் கலந்து வீசிடும் காற்றிலே
வீரம் மணக்குதப்பா - உம்மை
பெற்றவர் பெய்திடும் கண்ணீர்த் துளிகளில்
பெருமை தெறிக்குதப்பா
உத்தமர் உங்களை கொட்டிக்கொடுத்த -எம்
உள்ளம் கொதிக்குதப்பா - உங்கள்
உன்னத வேள்வியால் ஈழத்தமிழரை
உலகம் வியக்குதப்பா
ஆழ்கடல் மீதினில் ஆகுதியாகிய அன்புக்குழந்தைகளே
ஏழ்கடல் எழுமலை எங்குமே உம்பெயர் என்றும் இசைத்திடுமே

முன்னே அடி வைத்து முழங்கிய
பகைவன் முரசம் உடைந்ததடா
அவன் எண்ணிய கோட்டைகள் பண்ணிய சேட்டைகள்
எல்லாம் தகர்ந்ததடா
அன்னியன் இராணுவம் மண்ணிலே வைத்த கால்
பின்னிப் பிளந்ததடா - உங்கள்
கண்ணிலே மின்னிய கனல்பொறி
ரணவிரு கப்பலைச் சிதைத்தடா
ஆழ்கடல் மீதினில் ஆகுதியாதிய அன்புக்குழந்தைகளே
ஏழ்கடல் எழுமலை எங்குமே உம்பெயர் என்றும் இசைத்திடுமே

இயற்றியவர்: வேலணையூர் சுரேஷ்
இசை : முரளி
பாடியவர் : சாந்தன் சுகுமார்

பல்லவி

முல்லைமண் எங்களின் வசமாச்சு - ஈழம்
முற்றிலும் வெல்வது திடமாச்சு
தொல்லைகள் நீங்கிடும் மகிழ்வாச்சு - உயர்
தலைவனின் வழியிலே நிமிர்ந்தாச்சு

அனுபல்லவி

விலகிடு விலகிடு விரைவாய் - பகையே
விலகிட வில்லையேல் அழிவாய்

சரணம்

நேற்றிருந்த ஊர் பறித்தாய் நீ புரிந்த கோரம் - எம்
தெரு நீள நாம் நடந்தோம் விழிகளிலே ஈரம்
காற்றிப்போ எம் பக்கம் திரும்பியது காலம் - கரி
காலன் சேனை வென்றதிங்கே கொட்டுங்கடா மேளம்

புலிகள்பல மிழந்ததென்று சொன்னதெந்த வாய்கள் - பிர
பாகரனின் மூச்சினிலே அழிந்ததவர் பேய்கள்
அழகொளிரும் முல்லையெங்கள் பூமியென்றே பொங்கு - மீண்டும்
வந்ததெங்கள் கைகளிலே ஊதுங்கடா சங்கு

ஓயாத அலைகளென்று அண்ணனிட்ட பேரு - பகைவன்
ரணவிருவும் வான்கலமும் இங்கு சுக்கு நூறு
உயிரழிக்க வந்த படை உயிரழிந்த கோலம் - பெரும்
வெற்றியெங்கள் வாசலிலே தட்டுங்கடா தாளம்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : முரளி
பாடியவர் : மேஜர்சிட்டு

தொகையறா

பகைவாழும் குகைதேடிப் புலியாகிப் போனீர்
பகைமீது விழுகின்ற வெடியாக ஆனீர்
அழகான விழிமூடி - ஒளிதேடிப் போனீர்
அடிவானம் விடிவாகும் பொழுதாக ஆனீர்.

பல்லவி

விழிகள் கரைய உருகி உருகி
இரவில் அழுகின்றோம்.
விடியும் காலை மலர்கள் எடுத்து
தினமும் தொழுகின்றோம்.
பகைவனிருந்த குகையில் புகுந்த
உயர்ந்த புலிகளே - எங்கள்
தலைவனெடுத்த சபதம் முடித்த
கரிய புலிகளே.

சரணம்

நந்திக் கடலிடை வந்து தழுவிடும்
காற்றிலும் மூச்சிருக்கும் - அங்கு
நாளும் மலர்ந்திடும் காலை மலர்களில்
வந்து முகம் சிரிக்கும்
ஊற்றங்கரையிலும் நீரிருப்பீர் - உலு
விந்தம் பழத்திலும் நீரிருப்பீர்.

மூச்சில் நெருப்பது மூழப்பகைவரின்
மூச்சை எடுத்தவரே - முல்லைத்
தீவில் இருந்திட்ட பேய்கள் கதையினை
சென்று முடித்தவரே
தேசம் உமை மறக்காது - உமைத்
தேடும் விழி உறங்காது

நெஞ்சில் விடுதலை தீயைச் சுமந்துமே
நீண்ட வழி நடந்தீர் - பகை
அஞ்சிப் பயந்திட ஆடும் களத்தினில்
உங்கள் உயிர் கொடுத்தீர்
பாதை இனிப் பிசகாது - பிர
பாகரன் சேனைகள் தோற்காது.

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : முரளி
பாடியவர் : திருமலைச்சந்திரன்,



பல்லவி

தங்கத்தில் கிண்ணத்தை செய்துவா - அதில்
சந்தனம் குங்குமம் கொண்டுவா
மங்கலம் சொல்லியே ஆடிவா - பிர
பாகரன் வென்றதை பாடிவா
சந்திரிகாவுக்கு அந்தியடி - இங்கு
வந்துமே பாரென தந்தியடி
நந்திக் கடல்கரை எங்கும் மகிழ்வுடன்
தங்கி இருந்துமே கிந்தியடி.

சரணம்

ஏறிப்புலிப்படை வீரர் நடந்திட
காலில் கிடந்தது சிங்களம்
எங்கள் தலைவனின் எண்ணப்படி யாவும்
இங்கு நடந்தது மங்களம்
பாறிச் சரிந்து விழுந்தது - சிங்களப்
பாசறை யாவும் எரிந்தது
பிரபாகரன் சேனைமுன் வந்து வந்து - பகைச்
சேனைகள் யாவும் பணிந்தது

யாழைப் பறிகொடுத்தோடிப் புலிப்படை
காட்டில் ஒழித்தனர் என்றவா
யாவும் இனியெங்கள் காலில் எனச்சொல்லி
ஏறிப்போர் தொடுத்து நின்றவா
வாழும் வரை புலிவீரம் ஒருமுறை
தானும் வீழ்ந்திட மாட்டுதே - முல்லைத்
தீவில் பகைவரை தீயில் கருக்கித் தன்
வீரத்தை மீண்டுமே காட்டுதே.

வங்கக் கடல்மடியேறி உதவிக்கு
வந்த கடற்படை எங்கடா
வானில் எழுந்துமே வந்து இறங்குவேன்
என்ற வானூர்தியும் எங்கடா
போனது யாவையும் போனதடா - பிர
பாகரன் சேனையே நின்றதடா - தமிழ்
மானத்தை காத்திடும் மாபெரும் போரினில்
வேங்கைகள் சேனையே வென்றதடா.

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : முரளி
பாடியவர் : கணேஸ் குழுவினர்

பல்லவி

சேனைப்புலவுக்குள் ஆனை புகுந்தது
போலப்புலிகள் புகுந்தனர் - எங்கள்
தானைத் தலைவனின் ஆணைப்படி - முல்லைத்
தீவில் பகைவர் விழுந்தனர்
நின்ற பகையேதும் மிஞ்சவில்லை - இனிச்
சண்டைக்கு ஆயுதப் பஞ்சமில்லை
கொக்கிளாய் மண்கிண்டி எனவாழும் - பகை
கோட்டைகள் இங்குமே இனிவீழும்
தந்தனத்தோம் தன தந்தனத்தோம் - இனிச்
சிங்களம் வந்திடில் தந்தனத்தோம்

சரணம்

சந்திரிகா அன்று லண்டனிலாம் - அவர்
சகுனி மாமன்குளிர் கண்டியிலாம்
சிங்கப் படையிங்கு தீயினிலே - ஆளும்
சீமாட்டி சீதளச் சீமையிலே
எந்தப் படைவரினும் நின்றிடுவார் - புலி
ஏறிப் பகைமுழுதும் வென்றிடுவார்
தந்தனத்தோம் தன தந்தனத்தோம் - இனிச்
சிங்களம் வந்திடில் தந்தனத்தோம்

தூக்கித் தந்தாரடி ஆட்டிலறி - இனிச்
சொல்லித் தலையில் ஷெல் போட்டு அடி
பொம்மர் கெலியோடா இங்கு வந்தாய் - அட
எங்கள் மண்மீதா தங்க வந்தாய்
பூக்கும் தமிழீழம் என்று சொல்லி - இனிப்
பூநகரி தன்னைப் ஊதித்தள்ளி
தந்தனத்தோம் தன தந்தனத்தோம் - இனிச்
சிங்களம் வந்திடில் தந்தனத்தோம்

இயற்றியவர்: புதுவை இரத்தினதுரை
இசை : முரளி
பாடியவர் : நிறோஜன்,தியாகராஜா,மணிமொழி

பல்லவி

நந்திக் கடலோரம் முந்தைத் தமிழ்வீரம்
வந்து நின்று ஆடியது நேற்று - இன்று
தந்தனத்தோம் தாதெய் என்று நடமாடி
இங்கு வந்து வீசுறது காற்று

கையில் வந்து சேர்ந்தது ஆட்டிலறி - அதைக்
கொண்டு வந்த வேங்கையைப் போற்றடி
ஐயமில்லை என்று சொல்லிக்காட்டடி - இனி
அன்னியரின் பாசறையில் பூட்டடி

சரணம்

தண்ணீரூற்றுப் பிள்ளையாரின் தேரை எரித்தாயே
சந்ததியாய் வாழ்ந்திருந்த ஊரைத் தொலைத்தாயே
கண்ணகியாள் கோயிலுக்குப் போகத் தடுத்தாயே - இன்று
கைநிறைய ஆயுதங்கள் தந்து படுத்தாயே

யாழ்நகரை விட்டுப்புலி ஓடிவிட்டதென்றாய்
யாருமற்ற காட்டுக்குள்ளே போனதென்றா சொன்னாய்
நாலு மாதத்தோடு புலிசாகுமென்று சொன்னாய் - இன்று
நந்திக் கடலோரத்திலே நாறிக்கிடக்கின்றாய்

இன்னும் வலிகாமத்துள்ளே குந்தியிருப்பாயா
ரத்வத்தையின் சொல்லை நம்பி எங்கும் திரிவாயா
இன்னும் இன்னும் முல்லைத்தீவை எண்ணிக்கொள்ளுவாயா - புலி
என்றுவரும் என்றுவரும் என்று முழிப்பாயா.

# ஆனையிறவு
# ஆழப்பதிந்ததொரு காலச்சுவடு

ஆனையிறவுப்போர் விடுதலைப்போராட்டத்தில் பெரும் தடயமாகிவிட்டநிகழ்வு. எல்லோருடைய நினைவுகளிலும் உப்பளமாக இதுவரை காலமும் இருந்த இடம் இன்று வெற்றி பெற்ற யுத்தகளமாக மாறிவிட்டது.

குண்டும் குழியும் ஆகிவிட்ட நிலம் இன்று கொதித்துக் கொண்டிருக்கிறது. சிங்கள ஆதிக்கத்தைத் தகர்த்தெறியும் படைமுகாம் அழிப்புப் போரில் சிந்தப்பட்ட வேங்கைகளின் குருதியின் ஈரம் தாயக மீட்புக்காகப் போராடும் போராளிகளின் உணர்விலே புதிய கவிதைகளை விதைக்கிறது. இவை தமிழ் மக்களின் மனங்களில் மேலும் நம்பிக்கையை ஊட்டியுள்ளது.

யாழ்ப்பாணக் குடாநாட்டின் வாசல்படியின் முன் மலையாக நிற்கிறது ஆனையிறவு, தமிழீழத்தின் ஏனைய நிலப் பிரதேசங்களையும் யாழ்ப்பாண குடாநாட்டையும் இணைக்கும் வழியில் இருந்த முகாம் நம் எல்லோருடைய தொண்டைக்குழியிலும் நெருடிக்கொண்டிருக்கும் முள்ளாக இருந்தது.

கூழைக்கிடாக்கள் குடிவந்திருக்கும் கடனீரேரி கோடைகால நடுப்பகுதியில் வற்றிவர வன்னிக்கும் யாழ்ப்பாணத்துக்குமான நடைபாதை இயக்கச்சி கண்டாவளையூடாக தொடங்கிவிடும். (இராணுவ நெருக்கடிகள் இறுக்கமான போதெல்லாம் இப்பாதையூடாகவே மக்களின் சுவடுகள் அதிகமாகப்பதிந்தன.)

சலங்கைகள் ஒலிக்கும் மாடுகள் பூட்டிய வண்டிகளில் அன்று வற்றாப்பளைக்கும் புதூருக்கும் புளியம் பொக்கணைக்கும் போய் வந்தோமே! மடைதிறந்த வெள்ளம் போல் மடுவுக்கும் சென்று திரும்பினோம். கடற்காற்றும் வருடிச்செல்ல கடல் வெளியையும் உப்புமலைகளையும் கண்டு வியந்தோம். அருகருகே புகைவண்டியும் பிறவண்டிகளும் போட்டியிடும் மனவுணர்வில் கிறங்கிச் சென்றோம்.

1960 ஆண்டுகளில் சட்டவிரோதமாக வெட்டிய மரங்கள் இடமாற்றம் செய்யப்படுவதைத் தடுக்கவே இந்தப்பகுதியில் முதன் முதலாக 'கடவை' ஆரம்பிக்கப்பட்டது. அப்போது பொலிசும் வனபரிபாலன இலாகாவினரும் கூட்டாகக் கடமைபுரிந்தனர். பின்னர் 70களில் தென்னிலங்கையில் நடைபெற்ற ஜே. வி. பி.கிளர்ச்சியுடன் தொடர்ந்து இது ஒரு தடைமுகாமாக செயலாற்றியது. 80களில் எங்களுடைய தமிழீழ போராட்டம் கூர்மையுற்றெழத் தொடங்கியபோது இம்முகாமில் தமிழ் அவலக்குரல்கள் எழுந்தன. தமிழ் இளைஞர்களின் பச்சை உடம்புகள் இரத்தக்கண்டலுடன் பழுக்கவைக்கப்பட்டன. இது விசாரணைக்களம் என்ற பெயரில் சித்திரைவதைக்கூடமாக கொடூரம் புரிந்தது. இந்த முகாம்சார்ந்த பகுதிகள் இராணுவ வாடை வீசத்தொடங்கின. 80களின் நடுப்பகுதிவரை இந்த இராணுவ

முகாமிலிருந்து. வெளியேறும்சிங்களச் சிப்பாய்கள் இம் முகாமிற்கு தெற்கேயுள்ள பரந்தனைச் சூழவுள்ள இடங்களையும் வடக்கில் இயக்கச்சிமுதல் சாவகச்சேரி வரையிலான பகுதிகளையும் சுற்றிவளைத்துத் தேடுதல் வேட்டையில் ஈடுபட்டனர்.

83ம் ஆண்டு முற்பகுதியில் வன்னிப் பிரதேசத்தில் முதல் கண்ணி வெடிஓசை ஒலித்தது. வன்னியெங்கும் அதுபலசேதிகளைக் கூறியது. இந்த முகாமில் இருந்து பரந்தனை நோக்கிப் புறப்பட்ட இராணுவத்தின்மீது வயல்நிலமும் சிறுபுதர்க்காடும் சூழ்ந்த உமையாள் புரத்தில் விடுதலைப்புலிகளால் வன்னிப்பிரதேசத்தில் முதல் கண்ணிவெடித்தாக்குதல் நிகழ்த்தப்பட்டது. அத்தாக்குதல் இராணுவத்திற்கு உடல் ஊறுபாட்டையும் உள அதிர்ச்சியையும் ஏற்படுத்தியது.

இவ்வாறான தாக்குதல் சம்பவங்கள் இராணுவம் வெளியேறும் சந்தர்ப்பங்களில் இருபுறத்தும் நிகழ்ந்தன. 85ன் நடுப்பகுதியில் இம்முகாமில் இருபக்கங்களிலும் போராளிகள் காவலரண்களை அமைத்தார்கள். முகாம் முற்றுகைக்குள்ளானது. இராணுவம் முடங்கியது. ஆனாலும் இனவெறியன் சும்மா இருப்பானா? வெளிச்சன்னதங்கொள்ளும் போதெல்லாம் சன்னங்களைப் பொழிந்தபடி இன அழிப்பிற்காக இரத்தம் குடிப்பத்ற்காக முகாமைவிட்டு இராணுவம்வெளியேற முற்பட்டது. இராணுவம் முகாமைவிட்டு முன்னால் காலடிவைக்கமுற்படின் போராளிகளால் தடுத்துத் தாக்கித் திருப்பி அனுப்பப்பட்டது. எண்பத்தியேழில் இந்தியப்படை இங்கு வரும் வரை இந்த நிலைமை நீடித்தது.

இந்திய இராணுவம் இங்குவந்த போது ஆனையிறவில் முகாமிட்டு இருந்தனர் சிறிலங்கா இராணுவத்தினர் அக்கம் பக்கமாகவே இந்திய இராணுவத்தின் முகாமும் அமைந்தது. சிறிலங்கா இராணுவத்தின் நடவடிக்கைகளைப்போல் இந்தியஇராணுவமும் மேற்கொள்ளலாயிற்று. இப்பகுதியூடாகச் செல்லும் பயணிகளுக்கு சோதனைச் "சா"வடியாகவே இம்முகாம் தொடர்ந்து இருந்து.

இரத்தம் சிந்திய போராட்டத்தின் விளைவாக இந்திய இராணுவம் வெளியேறியதை தொடர்ந்து தொன்னூறில் மீண்டும் இம் முகாம் விடுதலைப் புலிகளின் கடும் முற்றுகைக்குள்ளானது. இங்கிருந்த தரைப்படை தம்மைத்தக்கவைத்துக்கொள்ள முற்றுமுழுதாக விமானப்படையின் முழுமையான ஒத்துழைப்பை நாடவேண்டியதாயிற்று. முற்றுகை நெருங்க நெருங்க தரையிறங்கும் உலங்கு வானூர்திகள் புலிகளின் தாக்குதலுக்குப் பயந்து தரையிறங்க தயங்கின.

போராளிகள் சிரமங்களுடன் கடுமையாக இம்முகாமிலிருந்த படையினருடன் அடிக்கடி போராடினார்கள். இராணுவமும் பதில் தாக்குதல் நடத்திக்கொண்டேயிருந்தது. இடையறாத முயற்சிகளினால் தரைமேல்அரண்களும் வேறுதயாரிப்பு நிலைகளும் போடப்பட்டு முற்றுகையை இன்னும் இறுக்கினர் போராளிகள்.

இன்னல் புரிந்துவந்த இந்தச்சிங்களப்பேய்களை அழித்து இந்த நிலத்தின்

தடைப்பட்டிருந்த பகுதியை மீட்க சூழலை அச்சமூட்டிக்கொண்டிருக்கும் பூதங்களை ஒழிப்பதற்காக முகாமைமுற்றாகத்தகர்க்கும் தாக்குதல் 1991 ஆடி மாதம் 10ம் திகதி ஆரம்பமானது.

விடுதலைப்புலிகளின் திறனாலும் கடினஉழைப்பாலும் உருவாக்கப்பட்ட கனரக வாகனங்கள் ஒரு யானைப்படைபோல முகாமைச்சூழ்ந்தன. பசிலன் தொடக்கம் சிறுரக பீரங்கிகள் வரை இடிபோல முழங்கிக்கொண்டிருந்தன. போராளிகள் முகாமைச் சூழவும் அணிவகுத்தும் நின்றனர். வெளிகளிலும் சதுப்பு நிலங்களிலும் சிறுமொண்டிப்பற்றைக்காடுகளிலும் தேசக்கடமை புரிந்தனர். முதல் நாள் போர் புலிகளுக்கு வெற்றியைக் கையில் தந்தது. முகாமின் சில பகுதிகள் போராளிகளால் கைப்பற்றப்பட்டன. சிங்கள இராணுவம் மூச்சுத்திணறியது. சிறிலங்கா அரசு முகாமைக்காத்துக்கொள்வதற்காக தனது முழுப்பலத்தைப்பாவித்தும் இராணுவம் ஈடாடத் தொடங்கியது. புலிகளின் விமானஎதிர்ப்புபீரங்கிகள் முழங்கின. தீயை உமிழ்ந்து விமானங்களை எதிர்த்து சுடத்தொடங்கின.

மழைபோல சன்னங்கள் பொழிந்தன. பீரங்கி எறிகணைகள் பூமியைப் பிளந்து கொண்டிருந்தன. விடுதலைப்புலிகள் சளைக்கவில்லை. சன்னங்களுக்கும் இடிபோன்ற வெடிகளுக்கும் பதில் கொடுத்துக்கொண்டே முன்னேறினார்கள். உவர், பிசு பிசுக்கும் நிலம், இரத்தத்தால் தோய்ந்து சிவந்தது.

இதனால் கடற்படை மூலம் ஆனையிறவின் வடகிழக்குத் திசையிலுள்ள வெற்றிலைக்கேணி-கட்டைக்காட்டுக் கடற்கரைப் பிரதேசத்தில் இராணுவத்தை இறக்கி புலிகளின் பலத்த எதிர்ப்புக்களின் மத்தியில் ஆனையிறவை நோக்கி நகர முற்பட்டது படை. இப்போது பிரதான யுத்தமையம் ஆனையிறவில் இருந்து கட்டைக்காடு வெற்றிலைக்கேணிப் பகுதிக்கு நகர்ந்தது.

தமிழ்மக்களின் தேசிய விடுதலை இராணுவம் முதன் முறையாக ஒரு மரபுவழி இராணுவமாக மாற்றம்பெற்று சிங்களஆக்கிரமிப்பு இராணுவத்துடன் முதன்முதலாக நேருக்குநேர் பெரும் யுத்தத்தில் இறங்கியது.

சுடும் மணலில் கடும் போர்மூண்டது. பாலைவனம் போன்ற மணல்வெளிப்பிரதேசத்தின் வெட்டவெளியெங்கும் துப்பாக்கி ரவைகளாலும் பீரங்கிக் குண்டுகளாலும் நிறைந்தது. அங்கு வீசிய காற்றின் ஒவ்வொரு அசைவிலும் கந்தக வெடியின் நெடியே கலந்திருந்தது. வானத்தில் வட்டமிட்ட இராட்சத சீனப் பறவைகள் பாரிய வெடிகுண்டுகளை வீசின.

வெற்றிலைக்கேணி பகுதியில் வந்திறங்கிய "ஒப்பிரேசன் பலவேகயவின்" 2000 இராணுவம் 48 மணி நேரத்தில் ஆனையிறவு முகாமில் சென்றடைந்து விடும் என யாழ்மாவட்ட சிறிலங்கா இராணுவத் தளபதி விஜயவிமலரட்ண கூறினார். புயல்

வேகத்தில் புறப்படும் என்று கூறிய ராணுவ அணி நத்தை வேகத்தில் கூட நகரமுடியாமல் போயிற்று. இராணுவத்தின் நகர்வை முறியடிக்க விடுதலைப்புலிகள் மேற்கொண்ட கடும் தாக்குதலால் சிங்களப்படையணிகள் சிதறின. களத்தில் மாண்டோரையும் காயப்பட்டேரையும் மாற்றீடு செய்தால் மட்டும் போதாதென்று உளவியால் ரீதியாக பின்னடைந்து போன முழு அணியையுமே மாற்றியமைக்க வேண்டியதேவை மாற்றான் படைத்தளபதிகளுக்கு ஏற்பட்டது.

மீள் ஒழுங்கமைப்புடன் முன்னேறிய சிங்கள இராணுவச்சங்கிலியை இடையில் ஊடுருவிப்புகுந்து உக்கிரமாய்த்தாக்குதல் நடத்தியது சாள்ஸ் அன்ரனி படையணி. இராணுவம் சின்னபின்னாமாக சிதறியது.

இராணுவம் கடல்வழியாக தரையிறக்கிய கனரக வாகனங்கள் பல புலிகளால் நாசமாக்கப்பட்டன. ஓயாத போர் நிகழ்ந்துகொண்டு இருந்தது. அந்தப்புழுதி மண்ணிலும்நம்புதல்வர்கள் விடுதலைப் பயிருக்கு இரத்தத்தால் ஈரம் பாய்ச்சிக் கொண்டேயிருந்தார்கள்.

இப்படியாக தொடர்ந்த வீரம் செறிந்த போர் ஒன்றை நாம் பல வீரர்களை வித்துகளாக விதைத்து நடத்தி வந்தோம். காலம்காலமாக ஆக்கிரமிப்பாளரின் கையில் இருந்து வந்த ஆனையிறவுப்பகுதியை எப்படியாவது கைப்பற்றியே தீருவோம் எனும் நம்பிக்கையில் இருந்தோம். அந்த நாளும் வந்தது.

போராட்டம் வெற்றிபெறுவதற்கு மக்கள் ஆதரவு தேவை. ஆனையிறவுப்போரில் மக்கள் ஆதரவு எமக்கு பெரிதாக கிடைத்தது. அந்த ஆதரவு உணவு, மருத்துவ உதவி, போர் களத்தில் பின்புல உதவிகள் என்ற எல்லையுடன் நின்றுவிடவில்லை. இவர்கள் திடப்படுத்தி வைத்திருந்த மன உறுதியும் இலட்சிய வேட்கையும்தான் தாயகத்துக்கான இந்த விடுதலைப் பணியில் தளராமல் முனைப்படைய பலம் கொடுத்தன். ஒரு போராளி தனது அத்தியாவசிய தேவைக்காக போர் முனையில் இருந்து அகன்றால் அந்த இடத்தில் நின்று இராணுவத்தை எதிர்க்கக்கூடிய ஆட்புலதேவை பூர்த்தி செய்யப்பட்டது யுத்தமுனையில் முன்னணிப் படையணியில் போராளிகளின் அருகில் மக்களும் நின்று சரித்திரம் படைத்தார்கள்.

எங்கள் போர்க்களத்தில் எங்கு பார்த்தாலும் போரிடும் மக்கள் நின்றதால் வெற்றியின் தூரம் அதிகமாக இருக்கவில்லை. தாயகத்தின் மீட்புக்காக தமிழ் மக்களின் சுதந்திர வரலாற்றுக்காக இரத்தம் சிந்தி இன்னுயிரை ஈய்ந்த போராளிகளின் உணர்வுகளுடன் அனைவரும் போரிட எழுந்தார்கள் சுதந்திரப் பூமியில் வாழ்வதற்காக போராடத் துணிந்து கொண்டமையினால் இன்று ஆனையிறவு தமிழர்வசம் ஆனது.

ஆக்கிரமிப்புப்படையை போரில் வெல்லவும் இழந்த எமது பிரதேசங்களை மீளக்கைப்பற்றவும் மக்கள் படைக்கட்டுமானத்தைக்கொண்டு ஒருங்கமைக்கப்பட்ட பலம்மூலமே எந்த வெற்றியையும் இலகுவாக்க முடியுமென்பது இன்று இந்த ஆனையிறவு முகாம் மீட்கப்பட்ட சமரிலிருந்து நாம் கண்டுகொண்டோம்



## தலைவரின் சிந்தனையிலிருந்து.....

விடுதலைப் போராட்டம் என்பது மக்கள் போராட்டம். பரந்துபட்ட வெகுசனங்கள் ஒன்று திரண்டு,ஒரு ஐக்கிய தேசமாக எழுச்சி கொண்டு போராட்டத்தில் பங்களித்தால் தான், எமக்கு வெற்றி நிச்சயம்.

- தமிழீழத் தேசியத் தலைவர் -

அச்சமைப்பு: நிலாபதிப்பகம், கிளிநொச்சி. 20/-